පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus

OLD

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

45 T I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

භරත නැටුම් I, II
பரத நாட்டியம் I, II
Bharatha Dancing I, II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

## பரத நாட்டியம் I

**கவனிக்க:**

(i) எல்லா வினாக்களுக்கும் விடை எழுதுக.

(ii) 1 தொடக்கம் 40 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் (1), (2), (3), (4) என இலக்கமிடப்பட்ட விடைகளில் சரியான அல்லது மிகப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

(iii) உமக்கு வழங்கப்பட்டுள்ள விடைத்தாளில் ஒவ்வொரு வினாவுக்கும் உரிய வட்டங்களில் உமது விடையின் இலக்கத்தை ஒத்த வட்டத்தினுள்ளே புள்ளடியை (×) இடுக.

(iv) அவ்விடைத்தாளின் பிற்பக்கத்தில் தரப்பட்டுள்ள மற்றைய அறிவுறுத்தல்களையும் கவனமாக வாசித்து, அவற்றைப் பின்பற்றுக.

1. "பரத குல பாக்கிய கலிகே" எனத் தொடங்கும் ஸ்லோகம்
   (1) கணபதி ஸ்துதி (2) அரங்கதேவதாஸ்துதி (3) தியானஸ்லோகம் (4) பகிப்பிராணன்

2. இலக்குமி தேவி எவ்வகை ஹஸ்தத்தினுள் உள்ளடக்கப்படுவார் ?
   (1) தேவ ஹஸ்தம் (2) நவக்கிரக ஹஸ்தம் (3) பாந்தவ்ய ஹஸ்தம் (4) தசாவதார ஹஸ்தம்

3. சுருதிக்குப் பதிலாகப் பயன்படுத்தப்படும் வாத்தியம்
   (1) வீணை (2) வயலின் (3) கிற்றார் (4) தம்புரா

4. "தகதிமி தகிட" என்ற சொற்கட்டிற்குரிய நடை
   (1) மிஸ்ர நடை (2) திஸ்ர நடை (3) கண்ட நடை (4) சதுஸ்ர நடை

5. மாடப் புறாவைப் போல கழுத்தசைத்தலானது
   (1) சுந்தரி (2) திரச்சீனா (3) பரிவர்த்திதா (4) பிரகம்பிதா

6. "பிரம்மரி" என்னும் பாத பேதத்தின் செய்கையானது
   (1) நிற்றல் (2) நடத்தல் (3) பாய்தல் (4) சுற்றுதல்

7. திரியாங்களிலொன்றாக அமைவது
   (1) ஜதி (2) ஜாதி (3) லகு (4) கதி

8. "நடானாம் தாளதாரனே" என்பதன் கருத்து
   (1) தாளம் தட்டுதல் (2) நிச்சயம் (3) முத்துமாலை (4) சந்திரன்

9. இரண்டு அர்த்தச்சந்திர ஹஸ்தங்களைப் பயன்படுத்தி அபிநயிக்கப்படும் சம்யுத ஹஸ்தங்கள்
   (1) மத்சயம், கூர்மம் (2) கருடன், வராகம் (3) மத்சயம், சக்கரம் (4) சங்கு, சக்கரம்

10. "தித்தெய்ந்த தாதெய்" அடவினை இவ்வாறும் குறிப்பிடலாம்
   (1) தட்டடவு (2) குதித்து மெட்டடவு (3) பரவல் அடவு (4) பாய்ச்சல் அடவு

11. அலாரிப்பின் ஆரம்பத்தில் பயன்படுத்தப்படும் திருஷ்டி பேதம்
   (1) உல்லோகிதம் (2) பிரலோகிதம் (3) நிமீலிதம் (4) ஸாசி

12. கழுகினைக் குறிக்கப் பயன்படுத்தப்படும் சம்யுத ஹஸ்தம்
   (1) பேருண்டம் (2) கர்க்கடகம் (3) நாகபந்தம் (4) கருடன்

[பக். 2 ஐப் பார்க்க

13. "கிடதக தரிகிடதொம்" அடவு அமைந்துள்ள தாளம்
(1) ரூபக தாளம் (2) ஆதி தாளம் (3) மட்டிய தாளம் (4) ஏக தாளம்

14. "S" வடிவத்துளைகள் இருமருங்கிலும் காணப்படும் வாத்தியம்
(1) வீணை (2) புல்லாங்குழல் (3) வயலின் (4) நாதஸ்வரம்

15. சமநிலை பேணி ஆடப்படும் கிராமிய நடனம்
(1) ஒயிலாட்டம் (2) கரகம் (3) கோலாட்டம் (4) கும்மி

16. தஞ்சை மாவட்டத்திலே நரிமணம் என்னும் ஊரில் பிறந்தவர்
(1) அருணாசலக் கவிராயர் (2) க. பொன்னையா பிள்ளை
(3) கோபால கிருஷ்ண பாரதியார் (4) வடிவேலுப்பிள்ளை

17. சப்த தாளங்களில் மிகவும் கூடுதலான அட்சரங்களை எடுத்துக் கொள்ளும் தாளம்
(1) துருவம் (2) ரூபகம் (3) திரிபுடை (4) ஜம்பை

18. நாட்டியக்கச்சேரி அமைப்பு முறையில் முதன் முதலாக மெய்யடவு ஆடப்படும் உருப்படி
(1) அலாரிப்பு (2) சப்தம் (3) வர்ணம் (4) ஜதீஸ்வரம்

19. தமிழர்களின் சம்பிரதாய கச்சேரிகளில் இடம்பெறும் துளைவாத்தியம்
(1) வயலின் (2) வீணை (3) நாதஸ்வரம் (4) கிளர்னட்

20. திரிபங்க நிலையிலிருந்து ஆடப்படும் சாஸ்திரிய நடனம்
(1) கதகளி (2) மோகினியாட்டம் (3) குச்சுப்புடி (4) ஒடிசி

21. படைத்தல் தொழிலைக் குறிக்கும் கடவுளுக்குரிய ஹஸ்தம்
(1) வலது கை கம்சாசியம், இடது கை சதுரம் (2) வலது கை திரிபதாகம், இடது கை திரிபதாகம்
(3) வலதுகை திரிபதாகம், இடது கை சிம்மமுகம் (4) வலது கை சதுரம், இடது கை கம்சாசியம்

22. குருவுடன் உரையாடுவதற்குப் பயன்படுத்தப்படும் சம்யுத ஹஸ்தம்
(1) ஸ்வஸ்திகம் (2) புஷ்பபுடம் (3) டோலம் (4) கபோதம்

23. $|_5$ O $|_5$ என்னும் தாளம்
(1) கண்டஜாதி மட்டிய தாளம் (2) சதுஸ்ரஜாதி மட்டிய தாளம்
(3) கண்டஜாதி துருவ தாளம் (4) கண்டஜாதி ரூபக தாளம்

24. சப்ரகமுவ நடனத்தில் முதன் முதலாக ஆடப்படுவது
(1) சுறள் (2) அலங்கார மாந்திராபத (3) ஆராத்தி அம்மா (4) கலாசம்

25. முதன் முதலில் சஞ்சாரி பாவத்தினை வெளிப்படுத்தும் உருப்படி
(1) அலாரிப்பு (2) சப்தம் (3) தில்லானா (4) ஜதீஸ்வரம்

26. "வாழைப்பூ" என்பதனைக் காட்டப் பிரயோகிக்கும் ஹஸ்தம்
(1) முகுளம் (2) சதுரம் (3) திரிபதாகம் (4) முஷ்டி

27. மூக்கினிலே அணியும் அணிகலன்களிலொன்று
(1) வங்கி (2) மிலாக்கு (3) கடகம் (4) ஆரம்

28. ஆடை, ஆபரணங்களினால் வெளிப்படுத்தப்படக்கூடிய அபிநயம்
(1) ஆங்கிகா அபிநயம் (2) ஆகார்யா அபிநயம் (3) வாச்சிகா அபிநயம் (4) சாத்விகா அபிநயம்

29. வர்ணத்தில் உத்தராங்கப் பகுதியில் அடங்குபவை
(1) பல்லவி, அனுபல்லவி (2) அனுபல்லவி, சரணம் (3) சரணம், சரணஸ்வரம் (4) முத்தாயிஸ்வரம், சரணம்

30. நவக்கிரக ஹஸ்தத்தில் "இராகு" வினைக் காண்பிக்கப் பயன்படுத்தப்படும் ஹஸ்தம்
(1) வலது கை சர்ப்பசிரஸ், இடது கை ஸுசி (2) வலது கை ஸுசி, இடது கை சர்ப்பசிரஸ்
(3) வலது கை ஸுசி, இடது கை பதாகம் (4) இடது கை ஸுசி, வலது கை பதாகம்

31. குதிரையுடன் தொடர்புடைய மகாவிஷ்ணுவின் அவதாரம்
(1) கல்கி (2) ஸ்ரீராமர் (3) பரசுராமர் (4) பலராமர்

[பக். 3 ஐப் பார்க்க

32. பரவல் அடவிற்குரிய சொற்கட்டு
(1) தெய்ஹத் தெய்ஹி (2) தெய்யும் தத்த (3) தத்தெய் தாஹா (4) தாதெய் தெய்த

33. ஆலயங்களில் நடனமாடுவதற்கென தளிர் சேரிப் பெண்களை நியமித்த காலப்பகுதி
(1) சங்கமருவிய காலம் (2) சோழர் காலம் (3) பல்லவர் காலம் (4) சங்க காலம்

34. மிருதங்கத்தின் வெளிவளையம் குறிப்பது
(1) சாபுதோல் (2) சுஜி (3) மீட்டுத்தோல் (4) மாட்டின்தோல்

35. கழி கொட்டி ஆடப்படும் கிராமிய நடனம்
(1) கும்மி (2) கரகம் (3) காவடி (4) கோலாட்டம்

- **36** தொடக்கம் **40** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலுமுள்ள கீறிட்ட இடத்திற்குப் பொருத்தமான விடையைத் தெரிவுசெய்க.

36. திருப்பாவையை ..................... அருளிச் செய்தார்.
(1) மாணிக்கவாசகர் (2) ஆண்டாள் (3) சுந்தரர் (4) சம்பந்தர்

37. பதினொரு வகையான ஆடல்களையும் ..................... ஆடினார்.
(1) கண்ணகி (2) பார்வதி (3) சிவன் (4) மாதவி

38. கீத கோவிந்தம் என அழைக்கப்படும் உருப்படி .......................
(1) ஜாவளி (2) கீர்த்தனை (3) அஷ்டபதி (4) சப்தம்

39. கட்டில், பல்லாக்கு போன்றவற்றைப் பிரயோகித்து காட்டுவதற்கு ...................... ஹஸ்தம் பயன்படுத்தப்படும்.
(1) கருடன் (2) கட்வா (3) வராக (4) அவகித்த

40. நாட்டியக் கிரமத்தில் கைவழி ...................... செல்ல வேண்டும்.
(1) மனம் (2) பாவம் (3) கண்கள் (4) ரசனை

* *

පැරණි නිර්දේශය/பழைய பாடத்திட்டம்/Old Syllabus



45 | T | I, II

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (සාමාන්‍ය පෙළ) විභාගය, 2017 දෙසැම්බර්
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (சாதாரண தர)ப் பரீட்சை, 2017 டிசெம்பர்
General Certificate of Education (Ord. Level) Examination, December 2017

භරත නැටුම් I, II
பரத நாட்டியம் I, II
Bharatha Dancing I, II

## பரத நாட்டியம் II

* **முதலாம்** வினாவையும் வேறு **நான்கு** வினாக்களையும் தெரிவுசெய்து, எல்லாமாக **ஐந்து** வினாக்களுக்கு **மாத்திரம்** விடை எழுதுக.

**1.** பின்வரும் வினாக்களுக்குச் சுருக்கமான விடை எழுதுக.
- (i) சப்ரகமுவ நடனத்தின் ஆரம்பப் பெயர் யாது?
- (ii) சம்யுத ஹஸ்தத்தின் 20 ஆவது ஹஸ்தம் யாது?
- (iii) குடைவரைக் கோயில்கள் யாருடைய ஆட்சிக் காலத்தில் கட்டப்பட்டது?
- (iv) தென்மோடிக் கூத்தில் முகத்திற்குச் செய்து கொள்ளும் ஒப்பனையின் பெயர் யாது?
- (v) புல்லாங்குழல் ஊதும் கண்ணன் நிற்கும் பாதபேதம் எது?
- (vi) காங்கூல ஹஸ்தத்தில் மோதிர விரலை நீட்டினால் வரும் ஹஸ்தம் எது?
- (vii) பிரகஸ்பதி என அழைக்கப்படுபவர் யார்?
- (viii) தஞ்சை சகோதரர்கள் கீர்த்தனைகளில் உபயோகித்த முத்திரை யாது?
- (ix) நட்டுவாங்கத்தாளத்திலே இடது தாள ஓசை, வலது தாள ஓசை முறையே எக்கடவுளர்களைக் குறித்து நிற்கின்றன?
- (x) ஒரு கோர்வையின் இறுதியில் இடம்பெறும் இரண்டு மகுட அடவுகளும் எவை?

**2.** (i) பரத நாட்டிய சம்பிரதாய உருப்படிகளில் மூன்றாவதாக இடம்பெறும் உருப்படி யாது?
- (ii) இவ் உருப்படியின் இலட்சணத்தை விளக்குக.
- (iii) இவ் உருப்படியின் முதலாவது கண்டிகையினை இசைக்குறியீட்டுடன் எழுதுக.

**3.** பின்வரும் ஹஸ்தங்களுக்குரிய விநியோகங்களை ஸ்லோகத்துடனும் அதன் கருத்துடனும் எழுதுக.
(i) சம்புட ஹஸ்தம் (ii) கர்த்தரீ ஸ்வஸ்திகம் (iii) பேருண்ட ஹஸ்தம் (iv) அவஹித்த ஹஸ்தம்

**4.** கோபால கிருஷ்ண பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றினையும் அவர்கள் கலைக்காற்றிய தொண்டினையும் விளக்கமாக எழுதுக.

**5.** பின்வருவனவற்றிற்குச் சிறுகுறிப்பு எழுதுக.
(i) பாத்திர இலட்சணம் (ii) கோர்வை (iii) தாண்டவம்

**6.** (i) பரத நாட்டியக் கச்சேரியில் பயன்படுத்தப்படும் முக்கியமான தோல் வாத்தியம் எது?
- (ii) அதன் அமைப்பு முறை, ஸ்ருதி செய்யும் முறை பற்றி விளக்குக.
- (iii) நீர் குறிப்பிட்ட இசைக்கருவியினை வரைந்து அதன் பாகங்களைக் குறித்துக் காட்டுக.

**7.** (i) மீனவ நடனம் பற்றிப் பின்வரும் அடிப்படையில் எழுதுக.
- அறிமுகம்
- ஆடல் அமைப்புக்கள்
- பாடல் அமைப்புக்கள்
- ஆடை, அணிகலன்கள்
- பயன்படுத்தப்படும் இசைக்கருவிகள்

(ii) நீர் பார்த்து இரசித்த மீனவ நடனத்தின் நிறைகள், குறைகள் என்பவற்றைக் குறிப்பிட்டு, அவற்றை நிவர்த்தி செய்வதற்கான ஆலோசனைகளையும் எழுதுக.

***